தன் அலங்கல் தோள்மேல் - அங்கதனது போர்மாலையணிந்த தோளின்மேலும் (ஏறிக்கொண்டு), பொருள் தரு வீரர் - (வேண்டுவார்வேண்டும்) பொருள்களையெல்லாங் கொடுக்கவல்ல ஸ்ரீராமலக்ஷ்மணர், போக - செல்ல, (அப்பொழுது),—பொங்கு ஒளி விசும்பில் தங்கும் தெருள் தரும் புலவர் - மிக்க ஒளியையுடைய சுவர்க்கலோகத்தில் தங்குகின்றவர்களும் தெளிவைத்தருகிற அறிவையுடையவர்களுமாகிய தேவர்கள், வாழ்த்தி-('பகைவர்களைவெல்லுக' என்று) வாழ்த்துக்கூறி, தெய்வம் பொன் பூ - தெய்வத்தன்மையுடைய பொன்மயமான கல்பகவிருக்ஷத்தின்மலர்களை, சிந்தினர் - (மேலே) சொரிந்தார்கள்.

விடை - வ்ருஷம் என்ற வடமொழியின் சிதைவு. கடுப்ப-உவமவுருபு. பொன்னுலகமாதலால், 'பொங்கொளிவிசும்பு' எனப்பட்டது. விசும்பு - இடவாகுபெயர். புலவர் - விபுதர் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. கற்பகப்பூவுக்குத் தெய்வத்தன்மை - வாடாமைமுதலியன. பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய உறுதிப்பொருள்கள். முதல்மூன்றடிகளில், முறைநிரனிறைப்பொருள்கோள் காண்க. (கூ0)

[வாநரசேனை மலைகளின்வழியாகச் செல்லுதல்.]

கூக. வையகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனை
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றினையனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறுச்சென்றனதகைப்பில்சேனை.

(இ - ள்.) 'வய வெம் சேனை - வலிய கொடிய வாநரசேனை, எய்திடின் - (நாட்டுவழியே) சென்றால், வையகமதனில் மாக்கள் - பூமியிலுள்ள மனிதர்கள், மயங்குவர் - கலங்குவார்கள்,' என்பது - என்பதை, உன்னி - எண்ணி, இராகவன் - இராமபிரான், இனிதின் ஏவ - இனிமையாகக் கட்டளையிட,— தகைப்பு இல் சேனை - (பிறர்) தடுக்கமுடியாத அச்சேனைகள்,—பெய் கனி - சொரிகின்ற பழங்களும், கிழங்கு - கிழங்குகளும், தேன் - தேனும், என்ற—, இனையன - இப்படிப்பட்டவைகளை, பெறுதற்கு - அடைவதற்கு, ஒத்த - தகுதியான, செய்ய மால் வரையே - அழகிய பெரிய மலைகளே, ஆறு ஆ - வழியாக, சென்றன - போயின; (எ - று.)

என்றினையன - தொகுத்தல். ராகவன் - ரகுகுலத்தில் அவதரித்தவன்: வடமொழித்தத்திதாந்தநாமம். (கூக)

[அநுமான் கதைகள்சொல்லிவர அனைவரும் எளிதில் வழிகடத்தல்.]

கூஉ. வீரரும்விரைவிற்போனார்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சோர்விலாக்காவற்பாடும்பெருமையுமரணுங்கொற்றக்
கார்நிறத்தரக்கரெண்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலநுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனார்.

(இ - ள்.) விரைவில் போனார்-விரைவிற்புறப்பட்டவர்களாகிய, வீரரும் - வாநரவீரர்களெல்லாரும்,— விலங்கல்மேல் - திரிகூடமலையின்மேலுள்ள,

இலங்கை - லங்கையில் வாசஞ்செய்கிற, கொற்றம் - வெற்றியையும், கார் நிறத்து - கரியநிறத்தையுமுடைய, அரக்கர்என்போர் - ராக்ஷசரென்று சொல்லப்படுபவர்களாகிய, வெய்யோர் - கொடியவர்களுடைய, சோர்வு இலா - தளர்ச்சியில்லாத, காவல் பாடும் - காவல்செய்யுந் திறமும், பெருமையும்—, அரணும்—, முதலிய - முதலான, கணிப்பு இலாத - அளவில்லாத சிறப்புக்களையெல்லாம், வார் கழல் அனுமன் - நீண்ட வீரக்கழலையுடைய அநுமான், சொல்ல - சொல்லிவர, (கேட்பதனால் இளைப்புத்தோன்றாமலே), நெடிது வழி - நீண்ட வழியை, எளிதில் போனார் - எளிதாகக் கடந்து போனார்கள்; (எ - று.)

இதனை, வேள்விகாத்தற்பொருட்டு விசுவாமித்திரமுனிவர்பின்னே நடந்துசென்ற ஸ்ரீராமலக்ஷ்மணர் அம்முனிவர் பற்பலகதைகளைச்சொல்லிவர இனிதுகேட்டுக்கொண்டு சிரமந்தோன்றாமல் நெடுவழியை எளிதிற்கடந்தாற்போலக் கொள்க. 'வீரரும் விரைவிற்போனார்' என்பதைத் தனிவாக்கியமாக எடுத்து, வாநரவீரர்களான சுக்கிரீவன் முதலியோரும் விரைவிற்சென்றார்களென்று உரைத்தலுமாம். பெருமை - தொகையிலும் வலிமையிலும் பெரிதாயிருக்குந் தன்மை. அரண் - மதில் அகழி முதலியன. (கூஉ)

[அனைவரும் பன்னிரண்டுதினத்தில் தென்கடல்சேர்தல்.]

கூங. அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனோடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனை
யின்னெடும்பழுவக்குன்றிற்பகலெலாமிறுத்தபின்னர்ப்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பரவைகண்டார்.

(இ - ள்.) அ நெறி நெடிது - அந்த நீண்டவழியில், செல்ல - (வாநரவீரர்களெல்லாம்) போக, அரி குலத்து அரசனோடு - குரங்குக்கூட்டத்துக்கு அரசனான சுக்கிரீவனுடன், நல் நெறி குமரர் - சன்மார்க்கத்திற்செல்லுகிற ராமலக்ஷ்மணர்களும், போக - செல்ல, நயந்து உடன் புணர்ந்த சேனை - விரும்பிக் கூடவந்த வாநரசேனைகளெல்லாம்,—இன் நெடும் பழுவம் குன்றில் - இனிய நீண்ட சோலைகளையுடைய மலைவழியிலே, பகல் எலாம் இறுத்த பின்னர் - பதினொருநாளையுங் கழித்த பின்பு, பன்னிருபகலில் - பன்னிரண்டாம்நாளில், சென்று - போய், தென் திசை பரவை கண்டார் - தெற்குத்திக்கிலுள்ள கடலைக் கண்டார்கள்; (எ - று.)

'இன்னெடும்பவழக்குன்றின்' என்னும் பாடத்துக்கு - இனிய நெடிய பவழமலையிலே அன்றை நண்பகற்பொழுதுமுழுவதிலும் இளைப்பாறத் தங்கியபின்பு பன்னிரண்டுநாள்களிற் சென்று தென்கடல்கண்டார்கள் என்று பொருள் காண்க. பவழமலை - தொண்டைநாட்டின் மேற்கெல்லைமலை. (கூங)

திருவடிதொழுதபடலம் முற்றிற்று.

சுந்தரகாண்டம்

முற்றுப்பெற்றது.